

# விழித்தெழ வேண்டிய வேளை

## பூஜ்ய சுவாமி சின்மயானந்தா

'ஹிந்துக்கள் தமக்கு தற்போது விடுக்கப்பட்டுள்ள சவாலிலிருந்து தப்பிப்பிழைப்பதற்குரிய கவசமாக, வாளாக, சங்கநாதமாக விசுவ ஹிந்து பரிஷத் விளங்குகிறது. ஆகவே, ஹிந்து சகோதர, சகோதரிகளே! உங்களது இந்தப் புவித பூமியின் மகத்தான லட்சியங்கள், உன்னதமான தலைமுறைத் தத்துவங்கள், வளமான மரபுரிமைகள் ஆகியவற்றிற்கு ஏற்ற வகையில் வாழ முயற்சி செய்யுங்கள்.

விசுவ ஹிந்து பரிஷத் ஊழியர்கள் நேர்மை, தியாகம், சிரத்தை, தன்னல மறுப்பு ஆகிய குணநலன்களுடன் பணியாற்றுவதை நான் அறிவேன். சிந்திக்கும் ஆற்றல் பெற்ற ஹிந்து மக்கள் அவர்களுக்கு முழு மனதுடன் ஆதரவு தெரிவித்தால் அவர்கள் சிறப்பான வெற்றியைச் சாதித்துக் காட்டுவார்கள்.

—— சின்மயா மிஷன் செய்தி ஏடு.

விசுவ ஹிந்து பரிஷத், தனது சொந்த பலத்துடனும், அதன் சகோதர இயக்கங்களின் சக்தியுடனும் மென்மேலும் வளர்ச்சியுற முடியும் என்றும், இறையருள் துணைகொண்டு இந்த லட்சியப் பணியில் வெற்றி காண முடியும் என்றும் நம்புகிறது; உறதிபூண்டுள்ளது.



"விசுவ ஹிந்து பரிஷத்"

43, ராமானுஜம் தெரு,
தியாகராய நகர்,
சென்னை 600 017 (போன 445665).



# கணபதி மணி மாலை

தொகுத்தவர்கள் :
H. வெங்கட்ராமன் & E. R. ஜோதி


பால கணபதி


ஊர்த்துவ கணபதி

## கணேஷ் டிராவல்ஸ்

நிதியுதவியுடன் 12-9-91 விநாயக சதுர்த்தியில்
விஸ்வஹிந்துபரிஷத் வெளியீடு

தயாரிப்பு :




**வேம்பத்தூர் கிருஷ்ணன்**
**VEMBATHUR KRISHNAN**

SUDARMANI PATHIPPAGAM
MADRAS-600 094.


உச்சிஷ்ட கணபதி

மஹா கணபதி துணை

"கணபதியென்றிடக் கலங்கும் வல்வினை; வள்ளல் விநாயகனை தொழத் துள்ளியோடும் வினைகளெல்லாம், வேழ முகத்து விநாயகனைத் தொழ வாழ்வு மிகுத்துவரும்" என்றெல்லாம் ஆன்றோர்களின் அநுபவ வாக்கிற்கிணங்க, வேண்டியவர்க்கு வேண்டியவாறு அருள் புரியும் ஆனைமுகக் கடவுளை வணங்கித் துதிபாட விரும்பும் அன்பர்கள் பயன்பெறும் பொருட்டு இச்சிறுநூல் வெளியிடப்படுகிறது.

எல்லா இடையூறுகளையும் களைந்து வெற்றியையும் மகிழ்ச்சியையும் தரவல்ல கணபதியை வணங்கிய பின்னரே எந்தக் காரியத்தையும் துவங்குவது முறையாகும்.

இந்நூல் வெளிவர நிதியுதவிசெய்த சென்னை கணேஷ் டிராவல்ஸ் உரிமையாளர் திருவாளர், எல். கிருஷ்ணன் அவர்களுக்கு எங்களுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். "இந்த மணி மாலை"யைச் சிறப்புறத் தயாரித்துக் கொடுத்த திரு. வேம்பத்தூர் கிருஷ்ணன் அவர்களுக்கும் எங்கள் அன்பு கலந்த நன்றி!

கணபதியின் பேரருள் அனைவர்க்கும் நிறைவதாகுக.

இப்படிக்கு
விஸ்வ ஹிந்து பரிஷத்

3-2



லட்சுமி கணபதி

உ

மஹா கணபதி காயத்ரீ

தத் புருஷாய வித்மஹே
வக்ரதுண்டாய தீமஹி
தன்னோ தந்தி
ப்ரசோதயாத்.

கஜானனம் பூதகணாதி ஸேவிதம்
கபித்த ஜம்பூபல ஸார பக்ஷிதம் |
உமாஸுதம் சோக வினாச காரணம்
நமாமி விக்னேஸ்வர பாதபங்கஜம் ||

மூஷிக வாஹன மோதக ஹஸ்த
சாமர கர்ண விளம்பித சூத்ர |
வாமனருப மஹேஸ்வர புத்ர
விக்ன விநாயக பாதநமஸ்தே ||

அகஜானன பத்மார்க்கம்
கஜானனம் அஹர்நிசம் |
அனேக தந்தம் பக்தானாம்
ஏகதந்தம் உபாஸ்மஹே ||


KOVILOOR ANDAVAR LIBRARY, KOVILOOR
No. 30895




ஐந்து கரத்தனை
யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை
போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை
ஞானக் கொழுந்தினை
புத்தியில் வைத்தடி
போற்றுகின்றேனே.

வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனிநுடங்காது—பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கையான் பாதம்
தப்பாமற் சார்வார் தமக்கு.

அல்லல்போம் வல்வினைபோம் அன்னை வயிற்றில் பிறந்த
தொல்லைபோம்—போகாத் துயரம்போம்—நல்ல
குணமதிகமாம் அருணைக் கோபுரத்தில் வீற்றிருக்கும்
கணபதியைக் கைதொழுதக்கால்.

முன்னவனே யானை முகத்தவனே முத்திநலம்
சொன்னவனே தூய்மெய்ச் சுகத்தவனே—மன்னவனே
சிற்பரனே ஐங்கரனே செஞ்சடையஞ் சேகரனே
தற்பரனே நின்தாள் சரண்.

# திருப்புகழ்

கைத்தல நிறைகனி அப்பமோடவல் பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணி
கற்றிடுமடியவர் புத்தியிலுறைபவர்
கற்பகமென வினை கடிதேகும்
மத்தமும் மதியமும் வைத்திடு மரன் மகன்
மற்பொரு திறள் புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே
முத்தமிழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட வெழுதிய முதல்வோனே
முப்புரமெரி செய்த அச்சிவனுறை ரதம்
அச்சது பொடி செய்த அதிதீரா
அத்துயரதுகொடு
சுப்பிரமணிபடும்
அப்புன மதனிடை இபமாகி
அக்குற மகளுடன்
அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே.

கலைநிறை கணபதி சரணம் சரணம்
கஜமுக குணபதி சரணம் சரணம்
தலைவநின் இணையடி சரணம்
சரணம்
சரவணபவகுக சரணம் சரணம்.
—வள்ளலார்


மஹா கணபதி

# விநாயகர் அகவல்




சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பலஇசை பாடப்
பொன்னரை ஞாணும் பூந்துகில் ஆடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ(கு) எறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்குசிந் தூரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்
நெஞ்சில் குடி கொண்ட நீல மேனியும்
நான்ற வாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணும் மும்மதச் சுவடும்
இரண்டு செவியும் இலங்குபொன் முடியும்
திரண்டமுப் புரிநூல் திகழ்ஒளி மார்பும்
சொற்பதம் கடந்த துரியமெய்ஞ் ஞான
அற்புதம் நின்ற கற்பகக் களிறே!
முப்பழம் நுகரும் மூஷிக வாகன!
இப்பொழுது என்னை ஆட்கொள வேண்டித்
தாயாய் எனக்குத் தானெழுந்(து) அருளி

மாயாப் பிறவி மயக்கம் அறுத்துத்
திருந்திய முதல்ஐந் தெழுத்தும் தெளிவாய்ப்
பொருந்தவே வந்தென் உளந்தனில் புகுந்து
குருவடி வாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்துத் திறம் இதுபொருள்என
வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளிக்
கோடா யுதத்தால் கொடுவினை களைந்தே
உவட்டா உபதேசம் புகட்டிஎன் செவியில்
தெவிட்டாத ஞானத் தெளிவையுங் காட்டி
ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்
இன்புறு கருணையின் இனிதெனக் கருளிக்
கருவிகள் ஒடுங்கும் கருத்தினை
அறிவித்(து)
இருவினை தன்னை
அறுத்திருள் கடிந்து
தலமொரு நான்கும் தந்தெனக்
கருளி
மலமொரு மூன்றின் மயக்கம்
அறுத்தே
ஒன்பது வாயில் ஒருமந்
திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதுங்
காட்டி


த்விஜ கணபதி




ஆறா தாரத்(து) அங்குச
நிலையும்
பேறா நிறுத்திப் பேச்சுரை
அறுத்தே
இடைபிங் கலையின் எழுத்தறி
வித்துக்
கடையில் சுழிமுனைக்
கபாலமும் காட்டி
மூன்றுமண் டலத்தின் முட்டிய
தூணின்
நான்றெழு பாம்பின் நாவில்
உணர்த்திக்
குண்டலி அதனில் கூடிய அசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து
மூலா தாரத்து மூண்டெழு கனலைக்
காலால் எழுப்பும் கருத்தறி வித்தே
அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்
குமுத சகாயன் குணத்தையும் கூறி
இடச்சக் கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடற்சக் கரத்தின் உறுப்பையுங் காட்டிச்
சண்முக தூலமும் சதுர்முக சூட்சமும்
எண்முக மாக இனிதெனக்(கு) அருளிப்
புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரிஎட்டு நிலையும் தெரிசனப் படுத்தி
கருத்தினில் கபால வாயில் காட்டி

இருத்தி முத்தி இனிமெனக்(கு) அருளி
என்னை அறிவித்(து) எனக்கருள் செய்து
முன்னை வினையின் முதலைக் களைந்து
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்(து)
இருள்வெளி இரண்டுக்கும் ஒன்றிடம் என்ன
அருள்தரும் ஆனந்தத்(து) அழுத்திஎன் செவியில்
எல்லை இல்லா ஆனந்தம் அளித்(து)
அல்லல் களைந்தே அருள்வழி காட்டிச்
சத்தத்தின் உள்ளே சதாசிவம் காட்டிச்
சித்தத்தின் உள்ளே சிவலிங்கம் காட்டி
அணுவிற்கு அணுவாய் அப்பாலுக்(கு) அப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமும் நீறும் விளங்க
நிறுத்திக்
கூடுமெய்த் தொண்டர்
குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தின்
அரும்பொருள் தன்னை
நெஞ்சக் கருத்தின்
நிலையறிவித்துத்
தத்துவ நிலையைத்
தந்தெனை ஆண்ட
வித்தக விநாயக !
விரைகழல் சரணே.


நிருத்த கணபதி




# மஹா கணபதி பூஜை

[எந்தப் பூஜை செய்வதானாலும் அல்லது திருமணம், க்ருஹப்ரவேசம் முதலிய சடங்காக இருந்தாலும் முதலில் மஞ்சளினால் ஆன விநாயகரை பூஜை செய்து அவர் எதிரில் ஸங்கல்பம் செய்து கொண்டு பிறகு மற்ற அனைத்தையும் செய்யவேண்டும். தினமும் வீட்டில் பூஜை செய்கிறவர்கள் கல்லினாலோ, மரத்தினாலோ, மண்ணினாலோ, ஸ்படிகத்தாலோ, பஞ்சலோகத்தாலோ, வெள்எருக்க வேரினாலோ ஆன விக்ரஹத்திலே கணபதியை ஆவாஹனம் செய்து அல்லது படத்திலும் பூஜை செய்யலாம். நேரம் கருதி சுருக்கமாகச் செய்ய விரும்பினால் கீழே கொடுத்துள்ளபடி ஸங்கிரஹமாக 16 நாமாக்களைச் சொல்லி அர்ச்சனை செய்து வழிபடலாம்.

வினாயகரை துளசியால் அர்ச்சனை செய்யக்கூடாது. அருகம்புல், எருக்கம்புஷ்பம், சிவப்பு புஷ்பங்கள், வில்வம் போன்றவை மிக விசேஷமானவை].

கரும்பு, வ்ளாம்பழம், மாதுளம்பழம், மோதகம், நிவேதனம் செய்யலாம்.

சுக்லாம் பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம் |
ப்ரஸன்னவதனம் த்யாயேத் ஸர்வ விக்னோப சாந்தயே ||

*[இரண்டு கை முஷ்டிகளாலும் தலையில் குட்டிக் கொள்ளவும்.]*

பிராணாயாமம் செய்யவும்—மந்திரம் தெரிந்தவர் மந்திர பூர்வமாகச் செய்யவும்.

ஸங்கல்பம் மமோபாத்த ஸமஸ்த
துரித க்ஷயத் வாரா ஸ்ரீ பரமேச்வர ப்ரீத்யர்த்தம்
ததேவ லக்னம் ஸுதினம் ததைவ தாராபலம்
சந்த்ரபலம் ததேவ, லக்ஷ்மீ பதே தேஅங்ரியுகம்
ஸ்மராமி; கரிஷ்யமாணஸ்ய கர்மண:
நிர்விக்னேன பரிஸமாப்த்யர்த்தம் ஆதௌ ஸ்ரீ
விக்நேச்வர பூஜாம் கரிஷ்யே.

(அப உபஸ்ப்ருச்ய)

தண்ணீரினால் கையை சுத்தி செய்யவும். (மஞ்சளினால் பிம்பம் செய்து பூஜிக்கவும்).


விஜய கணபதி

அஸ்மின் ஹரித்ரா பிம்பே
ஸுமுகம் மஹாகண
பதிம் ஸபரிவாரம் த்யாயாமி |
ஸ்ரீ விக்நேஸ்வராய நம:
ஆவாஹயாமி |
ஸ்ரீ விக்நேஸ்வராய நம:
ஆஸனம் ஸமர்ப்பயாமி
பாதயோ: பாத்யம்
ஸமர்ப்பயாமி |




(உத்தரணியால் ஜலத்தை எடுத்து அதற்கான தீர்த்த அர்க்ய பாத்திரத்தில் விடவும்).

ஹஸ்தயோ: அர்க்யம் ஸமர்ப்பயாமி (ஜலம் விடவும்)

ஆசமநீயம் ஸமர்ப்பயாமி (ஜலம் விடவும்)

ஸ்நாநம் ஸமர்ப்பயாமி (ப்ரோக்ஷணம் செய்யவும்)

வஸ்த்ரார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி । (அக்ஷதை போடவும்)

உபவீதார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி
ஆபரணார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி
திவ்ய பரிமள கந்தான் தாரயாமி (சந்தனம் இடவும்)
ஹரித்ரா சூர்ணம் ஸமர்ப்பயாமி (குங்குமம் இடவும்)
அக்ஷதான் ஸமர்ப்பயாமி
புஷ்பமாலாம் ஸமர்ப்பயாமி
புஷ்பாணி பூஜயாமி

ஓம் ஸுமுகாய நம:
,, ஏகதந்தாய நம:
,, கபிலாய நம:
,, கஜகர்ணகாய நம:
,, லம்போதராய நம:
,, விகடாய நம:
,, விக்நராஜாய நம :
,, விநாயகாய நம:

ஓம் தூம்ரகேதவே நம:
,, கணாத்யக்ஷாய நம:
,, பாலசந்த்ராய நம:
,, கஜாநநாய நம:
,, வக்ரதுண்டாய நம :
,, சூர்ப்ப கர்ணாய நம:
,, ஹேரம்பாய நம:
,, ஸ்கந்த பூர்வஜாய நம:

## கணேசாஷ்டோத்தர சத நாமாவளி

(நாமாவளிக்கு முதலில் ''ஓம்'' சேர்த்துக் கொள்ளவும்)

கஜானனாய நம:

கணாத்யக்ஷாய நம:

விக்னராஜாய நம:

விநாயகாய நம:

த்வைமாதுராய நம:

ஸுமுகாய நம:

ப்ரமுகாய நம:

ஸன்முகாய நம:

க்ருதினே நம:

ஜ்ஞான தீபாய நம:

ஸுகநிதயே நம:

ஸுராத்யக்ஷாய நம:

ஸுராரிபதே நம:

மஹாகணபதயே நம:

மான்யாய நம:

மஹன்மான்யாய நம:

ம்ருடாத்மஜாய நம:

புராணாய நம:

புருஷாய நம:

பூஷ்ணே நம:

புண்யக்ருதே நம:

அக்ரகண்யாய நம:

அக்ரபூஜ்யாய நம:

அக்ரகாமினே நம:

மந்தரக்ருதே நம:

சாமிகரப்ரபாய நம:

ஸர்வஸ்மை நம:

ஸர்வோபாஸ்யாய நம:

ஸர்வகர்த்ரே நம:

ஸர்வநேத்ரே நம:

ஸர்வஸித்தி ப்ரதாய நம:

ஸர்வஸித்தாய நம:

ஸர்வவந்த்யாய நம:

மஹாகாலாய நம:

ஹேரம்பாய நம:

லம்பஜடாய நம:

ஹ்ரஸ்வக்ரீவாய நம:

மஹோதராய நம:

மதோத்கடாய நம:

மஹா வீராய நம:

மந்த்ரிணே நம:

மங்களதாய நம:

ப்ரமதார்சிதாய நம:

ப்ராஜ்ஞாய நம:

ப்ரமோதாய நம:



ஹேரம்ப கணபதி

மோதகப்பிரியாய நம:
த்ருதிமதே நம:
காமினே நம:
கபித்தப்ரியாய நம:
ப்ரஹ்மசாரிணே நம:
ப்ரஹ்மரூபிணே நம:
ப்ரஹ்மவிதே நம:
ப்ரஹ்மவந்திதாய நம:
ஜிஷ்ணவே நம:
விஷ்ணு ப்ரியாய நம:
பக்தஜீவிதாய நம:
ஜிதமன்மதாய நம:
ஐச்வர்யதாய நம:
குஹஜ்யாயஸே நம:
ஸித்தஸேவிதாய நம:
விக்னகர்த்ரே நம:
விக்னஹர்த்ரே நம:
விச்வநேத்ரே நம:
விராஜே நம:
ஸ்வராஜே நம:
ஸ்ரீபதயே நம:
வாக்பதயே நம:
ஸ்ரீமதே நம:
ச்ருங்காரிணே நம:
ச்ரிதவத்ஸலாய நம:
சிவப்ரியாய நம:
சீக்ரகாரிணே நம:
சாஸ்வதாய நம:
சிவநந்தனாய நம:
பலோத்ததாய நம:

பக்தநிதயே நம:
பாவகம்யாய நம:
பாவாத்மஜாய நம:
மஹதே நம:
மங்களதாயிநே நம:
மஹேசாய நம:
மஹிதாய நம:
ஸத்யதர்மணே நம:
ஸதாதாராய நம:
ஸத்யாய நம:
ஸத்யபராக்ரமாய நம:
ஸுபாங்காய நம:
ஸுப்ரதந்தாய நம:
ஸுபதாய நம:
சுபவிக்ரஹாய நம:
பஞ்சபாதக நாசினே நம:
பார்வதீப்ரிய நந்தனாய நம:
விச்வேசாய நம:
விபுதாராத்யபதாய நம:
வீரவராக்ரகாய நம:
குமாரகுருவந்த்யாய நம:
குஞ்ஜராஸுர பஞ்ஜனாய நம:
வல்லபாவல்லபாய நம:
வராபயகராம்புஜாய நம:
ஸுதாகலஸ ஹஸ்தாய நம:
ஸுதாகரகலாதராய நம:
பஞ்சஹஸ்தாய நம:
ப்ரதானேசாய நம:
புராதனாய நம:
ஸர்வஸித்தி விநாயகாய நம:

நானாவித பத்ர புஷ்பாணி ஸமர்ப்பயாமி.

மஹா கணபதயே நம : நாநாவித
பரிமள பத்ர புஷ்பாணி ஸமர்ப்பயாமி |
மஹாகணபதயே நம : தூபம் ஆக்ராபயாமி

(தூபம் அல்லது ஊதுவத்தி காட்டவும்)

மஹாகணபதியே நம : தீபம் தர்சயாமி

நைவேத்யம் மஹாகணபதயே நம :
கதலீபலம் நிவேதயாமி | கற்பூர தாம்பூலம் ஸமர்ப்பயாமி

தீபாராதனை : ஸ்ரீ விக்நேச்வராய நம :

கற்பூர நீராஜனம் ஸந்தர்சயாமி |

மஹாகணபத யே நம :
ஸர்வோபசார பூஜாம்
ஸமர்ப்பயாமி.
(புஷ்பம் அக்ஷதை போடவும்)
பிரார்த்தனை :
வக்ர துண்ட மஹாகாய
ஸூர்யகோடி ஸமப்ரபா |
நிர்விக்னம் குருமே தேவ ஸர்வ
கார்யேஷு ஸர்வதா ||
—O—


தருண கணபதி


வீர கணபதி

## விநாயகர் திரு அகவல்

—ஸ்ரீநக்கிரதேவர்

சீர்தருமூலச் செழுஞ்சுடர்
விளக்கே !
கார்நிற மேனிக் கற்பகக்
களிறே !
அல்லல் வினையை அறுத்திம்
ஞான
வல்லபை தன்னை மருவிய
மார்பா...!

## கணேச ஷோடசநாம ஸ்தோத்ரம்

ஸுமுகஸ்ச்ச ஏகதந்தஸ்ச கபிலோ கஜகர்ணக: |
லம்போதரஸ்ச விகட: விக்நராஜோ வினாயக: ||
தூமகேதுர் கணாத்யக்ஷ: பால சந்த்ரோ கஜானன: |
வக்ரதுண்ட சூர்ப்பகர்ண: ஹேரம்பஸ்கந்த பூர்வஜ: ||
ஷோட சைதாநி நாமாநி ய: படேத் ச்ருணுயாதபி |
வித்யாரம்பே விவாஹேச ப்ரவேச நிர்கமே ததா |
ஸங்க்ராமே ஸர்வ கார்யேஷு விக்னஸ்தஸ்ய ந ஜாயதே ||

குருவே சரணம் ! குணமே சரணம் !
பெருவயிற்றோனே ! பொற்றாள் சரணம் !
அரிதிருமருகா ! அறுமுகன் துணைவா !
கரிமுகவாரணக் கணபதி ! சரணம்.

—O—


A. No. 30305

## 1970-முதல் ஆண்டுக்கு ஒன்று

இந்த ஆண்டு (1991) திருவண்ணாமலை ஆலய வரலாறு.




ஆண்டு தோறும் வெவ்வேறு பாசுரங்கள் கொண்டவை.

சுடர்மணி பதிப்பகம், 19, பஜனை கோயில் முதல் தெரு
சூளைமேடு, சென்னை-600 094.

ஸ்ரீ மகா கணபதி துணை

# GANESH TRAVELS

(TOURIST TRANSPORT OPERATORS)

35/1, P. C. O. ROAD, EGMORE, MADRAS-600 008.

Telex : 041-8724 GTMS-IN



Phones : 8252345 * 8250066
8254243 * 8250202
8254444

**Branches :** Pallavaram, Madras-43. ☎ 405135
Bangalore-560 004. ☎ 607428, 607639